உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

"ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானதரு வாணியை உள்நாடு"


| மலர் ௫ | ஆங்கீரச ஆண்டு புரட்டாசித் திங்கள்<br>1932 ௵ செப்டம்பர்௴ | இதழ் ௯ |
|---|---|---|


## திருநாளைப்போவார்

[பத்திராசிரியர்]

*திருவுடைய தில்லைவா ழந்தணர்கள் கைதொழுதார்*
*பாவரிய தொண்டர்களும் பணிந்துமனங் களிபயின்றார்*
*அருமறைசூழ் திருமன்றில் ஆடுகின்ற கழல்வணங்க*
*வருகின்றார் திருநாளைப் போவாராம் மறைமுனிவர்.*—சேக்கிழார்.

சைவசித்தாந்தத்தின் சிறந்த கொள்கைகளுள் ஒன்று, சிவபரம் பொருளாகிய முழுமுதற் கடவுளின்மீது ஆராத காதலுடைய மெய்யடியார்கட்கு உடல் பொருள் ஆவி என்னும் மூன்றினிலாகும் தடைகள் சூரியனைக்கண்ட பனிபோல் விட்டகலும் என்பது. இவற்றுள் உடல்பற்றிய (தடை அல்லது கட்டுப்பாடாகிய) சாதியைத் தமது மெய்யன்பினால் வென்ற பெருமைக்கு மலையிலக்காகவுள்ளவர் திருநாளைப் போவார். அவரது திருநக்ஷத்திரம் நாளது புரட்டாசி௴ ௨௧-ம் தேதி (21-9-1932) புதன் கிழமையன்று வருகிறது. அந்நாளில் திருநாளைப் போவார் திருக்குலத்தவரும், ஏனைய உயர் குலத்தினர் என்று செருக்கித் தருக்கி மலைவோரும் நாளைப் போவார் மெய்ச் சரிதையைப் பயின்று அதன்கணுள்ள சாத்திர நுட்பங்களைக் கைக்கொண்டு ஒழுகுமாறு வேண்டுகின்றோம். அதற்குதவியாக ஈண்டு நமது சிற்றறிவிற் கெட்டிய சிறு பொருள்கள் சிலவற்றைக் குறிக்கின்றோம்.

திருநாளைப் போவார் சரித்திரம் பெரிய புராணத்துள் 37 செய்யுட்களால் கூறப்பட்டுள்ளது. அவற்றுள் முதல் ஐந்தில் கொள்ளிடம் பாய்

ின்ற மேற்கா நாட்டு வளனும் அந்நாட்டிலுள்ள ஆதனூரின் வளனும் அழகாக வர்ணிக்கப்பட்டுள்ளன. பின் ஐந்து பாட்டில் ஆதனூரிலுள்ள புலைப் பாடி (=பறைச்சேரி)யின் ஒழுங்கும் ஆங்கு வசிக்கும் சிறுவர் சிறுமியர் புலைச்சியரின் ஒழுங்கும் வர்ணிக்கப்பட்டுள்ளன. இப்பகுதியில் புலையர்களை "செறிவலித்திண் கடைஞர்" என்றும், புலைச்சியரை "புன் புலைச்சியர்கள் கள்ளருந்து களிதூங்க" என்றும் சேக்கிழார் கூறுவது நோக்கத்தக்கது. இத்தகைய "கடைஞர் இருப்பின்" பால் "மெய்ப்பரிவு சிவன் கழற்கே விளைத்த வுணர்வோடும்" ஒப்பில்லாத நந்தனர் என்றொருவர் வாழ்ந்திருந்தார். அவர் சிவபெருமான்மீது வைத்த,

"பிறந்தபெருங் காதலினால் செம்மைபுரி சிந்தையராய்
மறந்துமயல் நினைவின்றி வருபிறப்பின் வழிவந்த
அறம்புரி கோள்கையராயே அடித்தொண்டின் நெறிநின்றார்"

அதாவது எவ்வுயிர்க்கும் தீங்கிழைக்காத செம்மை யுடையராய்ப் பொருளல்லவற்றைப் பொருளெனக் கொள்ளும் மயக்கவுணர்ச்சி சிறிதுமின்றி, தாம்பிறந்த குலத்துக்கேற்ற தருமத்தையே செய்யும் உறுதியையே (இங்கு ஏகாரம் மிகவும் கவனிக்கற்பாலது) உடையாராய், சிவபெருமான் திருவடித் தொண்டெனும் செந்நெறியில் நின்றார் என்பது பொருள். எனவே, தமது குலத்துக்கேற்ப,

"சார்பில்வரும் தொழில்செய்வார் தலைநின்றார் தொண்டினால்"

(அதாவது தொண்டுபுரிந்து தலைமைபெற்று விளங்கினர்.) சிவபெருமான் கோயில்கட்குப் பேரிகைத்தோல், வீணையாழ் நரம்பு, அருச்சனைக் கோரோசனை முதலியன தந்தார்.

"இவ்வகையால் தந்தொழிலின் இயன்றவெலாம் எவ்விடத்தும்
செய்வனவும் கோயில்களில் திருவாயில் புறநின்று
மெய்விரவு பேரன்பு மிகுதியினால் ஆடுதலும்
அவ்வியல்பிற் பாடுதலு மாய்நிகழ்வார் அந்நாளில்"

(அதாவது, தம்மால் இயன்றவற்றை யெல்லாம் செய்து, கோயில்களின் கோபுர வாயில்கட்குப் புறத்தே நின்று உண்மைப் பேரன்பின் மிகுதியால் ஆடல் பாடல் நிகழ்த்துவார்.)

ஒருநாள் திருப்புன்கூரைத் தரிசிக்க எண்ணி ஆங்குள்ள சிவாலயத்தினருகிற் சென்று,

"சீரேறும் இசைபாடித் திருத்தொண்டர் திருவாயில்
நேரேதம் பிடவேண்டும் எனநினைந்தார்"

உடனே சிவபெருமான் தனது சந்நிதிக் கெதிரில் மலைபோலுள்ள நந்திதேவரை விலக்கித் தன்னைப் புலப்படுத்தினர். நந்தனரும் திருவாயில் முன்னின்று பணிந்தெழுந்து ஒரு குளத்தையும் வெட்டி யுதவினர். பிறகு "கோயில் வலங்கொண்டு பணிந்தெழுந்து" திரும்பினர்.

இவ்வாறு பல தலங்களில் வணங்கி, தொண்டு செய்து வந்த நந்தனருக்கு "மிக்கெழுந்த, சித்தமோடும் திருத்தில்லைத் திருமன்று சென்

மிறைஞ்ச, உய்த்த பெருங்காதல் உணர்வொழியாது" வந்துதித்தது. இந்தக் காதல் மிகுதியால் தூக்கமின்றி மறுநாள் "அங்கெய்த, (—அதாவது சிதம் பரம் போக), ஒன்றி அணைதரு தன்மை உறுகுலத் தோடிசைவில்லை, என் றிதுவும் எம்பெருமான் ஏவலெனப் போக்கொழிவார்." அதாவது சிதம் பரம் போய் தரிசிப்பது தம் குலத்துக்கு அடாது, இது இறைவன் கட் டளை யென்று போகாதிருப்பார். "நன்று மெழுங்காதல் மிக நாளைப் போவேன் என்பார்" (மீண்டும் அவ்வன்பு பொங்க 'நாளைப் போவேன்' என்பார்.) இவ்வாறு கூறியதால் இவருக்கு 'நாளைப் போவார்' என்ற பெயர் உண்டாயிற்று.

நாளை, நாளை யென்று நாட்கள் செல்வதைப் பொறுக்காமல் "பிறவிப் பிணிப்பொழிய" ஒருநாள் புறப்பட்டுத் தில்லையின் எல்லையை யடைந்தார். ஆங்கு தில்லை வாழந்தணரின் வேள்விப்புகை கண்டும், மறையொலி கேட் டும் அஞ்சி நின்றார். மீண்டும் தில்லையின் பெருமையை நினைந்து ஊரைச் சூழ்ந்துள்ள மதிற்சுவரின் வாயிலின் உள்புகுந்தார். (இச்சுவர் இப்போ தில்லை). ஆங்குள்ள உயர்ந்த மாளிகைகளையும் அவைகளினின்றெழும் வேதிகைகளையும் கண்டு,

"இப்பரிசாயிருக்க எனக்கு எய்தல் அரிதென்று அஞ்சி
அப்பதியின் மதிற்புறத்தின் ஆராத பெருங்காதல்
ஒப்பரிதாய் வளர்ந்தோங்க உள்ளுருகிக் கைதொழுதே
செப்பரிய திருவெல்லை வலங்கொண்டு செல்கின்றார்"

இவ்வாறு இரவும் பகலும் எல்லை வலஞ்செய்வார் ஒருநாள் "திரு மிடற்றார் மன்றின் நடங் கும்பிடுவ தெவ்வண்ணம் என நினைந்தே" கவலை யுடன் துயின்றார். இவ்வாறு "இன்னல்தரும் இழிபிறவி இதுதடை யேன்றே" வருந்தி நித்திரை செய்யும் நந்தனுருடைய சொப்பனத்தில் நடராஜர் வந்து,

"இப்பிறவி போய்நீங்க எரியினிடை நீமூழ்கி
முப்புரிநூல் மார்பருடன் முன்னணைவாய்"

என்று கூறித் தில்லைவாழந்தணர்க்கும் எரி வளர்க்குமாறு கட்டளை யிட் டார். இதைக் கேட்ட தில்லைவாழந்தணர் நந்தனுரிடம் சென்று,

"ஐயரே அம்பலவர் அருளால் இப்பொழு தணைந்தோம்
வெய்யஅழல் அமைத்து உமக்குத் தாவேண்டி யெனவிளம்ப
நையுமனத் திருந்தொண்டர் 'நான்உய்ந்தேன்' எனத்தொழுதார்"

பிறகு தென் மதிற்புறத்தில் தீ வளர்க்கப் பட்டது. இறைவனை நினைந்து தீயை வலம்வந்து நந்தனர்,

"கைதொழுது நடம்ஆடுங் கழல்உன்னி அழல்புக்கார்
எய்தியஅப் பொழுதின்கண் எரியின்கண் இம்மாயப்
பொய்தகையும் உருவொழித்துப் புண்ணியமா முனிவடிவாய்
மெய்திகழ்வெண் ணூல்விளங்க வேணிமுடி கொண்டெழுந்தார்"

(அதாவது தீயில் புகுந்தவர் தமது உடலைத் துறந்து சிவ முனிவர் வேடத்தோடும் எழுந்தார்.) செந்தீயிலிருந்து இவர் எழுந்தது செந்

தாமரையில் பிரமன் தோன்றியதுபோ லிருந்தது. தேவதுந்துபி முழங்கிற்று; வானவர் மலர்மாரி பொழிந்தனர். தில்லைவாழந்தணர் தொழுது நின்றார். அவர்களுடன் சென்று கோபுரம் தொழுது புக்கு,

" உலகுய்ய நடமாடும்
எல்லையினைத் தலைப்பட்டார் யாவர்களும் கண்டிலரால் "

(அதாவது சிற்றம்பலம் புகுந்தவுடன் ஒருவரும் காணுதவாறு மறைந்தார்.) எனவே நந்தனர்,

" மாசுடம்பு விடத்தீயின் மஞ்சனம்செய் தருளியெழுந்த
ஆசில்மறை முனியாகி அம்பலவர் தாளடைந்தார் "

என்பது பெற்றும்.

மேற்கூறிய விவரங்கள்மட்டும் அடங்கிய வரலாறு பக்திரசம் ததும்பும் ஒரு தீம்கனியாகச் சேக்கிழார் பெருமானல் நமக்களிக்கப்பட்டுள்ளது. இந்த ரசம் ஒன்று போதாதென்று கருதி சிருங்கார ரசம், சோக ரசம், ஹாஸ்யரசம் முதலியவைகளைப் புகுத்தி இவ்வுண்மை வரலாற்றைத் திரித்துப் பல புதிய விஷயங்களைச் சேர்த்து நந்தனர் நாடகமாகவும், நந்தனர் சரித்திரக் கீர்த்தனை காலக்ஷேபங்களாகவும் இவ்வரலாறு உலவி வருவதைக் காண்கின்றோம். நந்தனர் ஓரந்தணரிடம் அடிமையாதல், நந்தனருக்குப் பைத்தியம் பிடித்தல், சேரியில் பூசைபோடுதல், பெரிய கிழவன் வருதல், நந்தனர் எஜமானனை வேண்டுதல், நந்தனருக்காகச் சிவ பூதங்கள் ஒரே இரவில் உழுது விரைப்பதுமுதல் கதிரறுத்தல்வரை எல்லாம் செய்தல், நந்தனர் வேதியருக்கு உபதேசித்தல் முதலிய பல விஷயங்கள் கர்ண பரம்பரையாகவோ தலபுராணங்கள் மூலமாகவோ கலந்துள்ளன. இவற்றையெல்லாம் கருத்தில் வையாமல் சேக்கிழார் பெருமானது உண்மை வரலாற்றின் உள்ளக்கிடக்கையை ஆராய்வோம்.

இவ்வாராய்ச்சியில் நுழைபுங்கால் சில விஷயங்களை நன்றாய் ஞாபகப் படுத்திக்கொள்ளவேண்டும். நாம் வாழும் இவ்விருபதாம் நூற்றாண்டின் குறிக்கோள்களும், சமூகச் சீர்திருத்தக்கொள்கைகளும், அரசியற்கிளர்ச்சிகளும், சமவுரிமைப் பேச்சுகளும், வகுப்புவாதப் பூசல்களும், இன்ன பிறவும் சேக்கிழார் காலத்தில் இல்லை. எனவே இவைகளிற் படிந்த மனதோடு சேக்கிழார் கூறும் வரலாற்றை ஆராய்வது உண்மையை நல்காது. சேக்கிழார் திருவாக்கில் இவைகளைப் புகுத்திப் பொருள் கூறுவதும், பொருந்தாத இடங்கள் " சேக்கிழார் வாக்கல்ல, இடைச் செருகல்கள் " என்று ஒதுக்குவதும் அவருக்குச் செய்த அபசாரங்களாகவே அறிஞரால் எண்ணப்படும்.

'செறிவலித்திண் கடைஞர்,' 'கடைஞர் இருப்பின்,' 'இழிபிறவி இது தடை,' 'மாசுடம்பு விடத்தீயின்,' என்ற வாக்குகளிலிருந்து புலையரை இழிந்த பிறப்பினராகவும், குலவரிசையில் கடைசியராகவும் கருதுவது சேக்கிழாருக்கு உடன்பாடு என்பது வெளிப்படை. "பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும், சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமையால்" என்பது திருக்

குறள். இச்செய் தொழில் வேற்றுமையே குலவேற்றுமையையும் உயர்வு தாழ்வையும் உண்டாக்கிற்று. இச்செய் தொழில் வேற்றுமை குலத்தை யும் உயர்வு தாழ்வையும் உண்டாக்குதல் தவறென்றும் அவைகள் சமூகத் தில் இருத்தல் கூடாதென்றும் நம்போன்றே சேக்கிழாரும் எண்ணியிருத் தல் கூடும். என்றாலும் சேக்கிழார் அவைகளைப் பொருட்படுத்தவில்லை. ஏனெனில் பெரிய புராணம் முழுமையும் அவைகளை அன்பினால் வெல்லும் நெறியின் மாண்பையே அவர் உயர்த்திக் கூறுகின்றார். எனவே, அவர் காலத்து மக்கள் எண்ணியது போலவே புலையரை இழிபிறப்பினரென்றும் கடையரென்றும் சேக்கிழார் கூறுவதில் இழுக்கில்லை.

இனி நந்தனார் அன்பினைக் கவனிப்போம். கள்ளும் புலாலும் கமழ் கின்ற புலைப்பாடியில் இருப்பினும் நந்தனார், “மெய்ப்பரிவு சிவன் கழற்கே விளைத்த வுணர்வொடும் வந்தார்.” இதிலிருந்து தம்மைச் சுற்றியுள்ள தீமை களிற் சாராது கடவுள்மீது உண்மையன்புடையவராய் விளங்கினமையால் நந்தனாரது மன வலிமை அறியப்படும். சார்ந்ததன் வண்ணமாதல் உயிருக் கியல்பு. எனவே, தம்மைச் சுற்றியுள்ள புலையர்களோடு கள்ளுண்டு புலாலுண்டு கூத்தாடுவது இயல்பெனினும், அதைவிட்டு நந்தனார் சிவபக்தி யிற் சிறந்து விளங்கியது அவரது உயிரின் உறுதியைக் காட்டுகிறது. உயர்குடிப் பிறந்தோர் சிவபக்தியிற் சிறந்து விளங்குவதைவிட நந்தனார் விளங்கியதே மிக மேன்மையுடைத்து. உயர் குடிப்பிறந்தோர் நல்லொழுக் கத்தை விட்டு சிவபக்தி யின்றி கள்ளுண்டு புலாலுண்டு களியாட்டத்தி லீடுபட்டால் அவர்களைப்புலையரினும் இழிந்தாராகக் கொள்வதே தகுதி. சேற்றில் செந்தாமரை விளைவதைப்போல் இழிபொருள்கள் சூழ்ந்துள்ள விடத்தி லிருந்தே உயர் சிவபக்தி செய்தல் கூடுமென்பதற்கு நந்தனார் ஒரு பெருஞ் சான்றாகவுள்ளார்.

நந்தனாருடைய சிவபக்தி மன தளவில் பேச்சளவில் நிற்கவில்லை. செயலி லும் விளங்கிற்று. தமது குலத்துக்கேற்ற தொண்டுபுரிவதே தகுதி யென்று கருதி, கோயில்களில் பேரிகை முதலிய தோற் கருவிகட்குத் தோலும், யாழ், வீணை முதலிய நரம்புக்கருவிகட்கு நரம்பும், ஈசனார் பூசனைக் குக் கோரோசனையும் தந்து நந்தனார் தமது பக்தியைச் செயலில் நிறுத்தினார். “வருபிறப்பின் வழிவந்த அறம்புரி கோள்கையராயே அடித்தொண்டின் நெறிநின்றார்” என்பதில் சேக்கிழார்கொடுத்துள்ள ஏகாரம் அவர் கருத்தை வலியுறுத்தும். ஏனையவழிகளில் தொண்டுசெய்யக் கருதினால் வசதிக்குறை வினால் தடைகள் நேரும். பிறகு தம்குலத்தின் இழிவு, தடைகளின் தன்மை முதலிய மலப்பொருள்களிலேயே அறிவுசெல்லும். எனவே, தமது குலத்துக்கேற்ற தொண்டாற்றியது நந்தனாரது மெய்யன்பின் தன்மையை விளக்குகின்றது.

இனி நந்தனாரது அன்பின் தன்மையை நோக்குவாம். “கோயில்களில் திருவாயில் புறநின்று மெய்விரவு பேரன்பு மிகுதியினால் ஆடுதலும், அவ் வியல்பிற் பாடுதலும்” செய்தார். கோபுரவாசலுக்கு நேரே நிற்காமல் புற மாக நின்று உள்ளிருக்கும் இறைவனை மனக் கண்ணினாற் கண்டு தொழு

மவர்க்குப் பேரன்பு மிகுதியும் ஆடல்பாடலும் உண்டாயின. உயர்குலச் செருக்குடையோர் இறைவன் திருமுன்பு சென்றும் கல்மனத்தராய் வீண் வம்புகளைப் பேசுவதும் அன்பற்ற செயல்களைப் புரிவதும் இக்காலத்தில் நாம் கண்கூடாகக் காண்பதொன்று. இதிலிருந்தும் நந்தனர் அன்பின் மேன்மை புலப்படும்.

இனி நந்தனரது அன்பு வளரும் முறையைக் கவனிப்போம். திருவாயில் புறநின்று வணங்கிய பேரன்பு முதிர்ந்து, திருப்புன்கூரில் திருவாயில் நேரே கும்பிட வேண்டுமென்ற நினைப்பை உண்டாக்கிற்று. இஃது அன்பின் முதிர்ச்சியால் உண்டாய ஆசையே ஒழிய இக்காலத்திய கிளர்ச்சிக்காரரைப்போல் சமவுரிமை பாராட்டி யெழுந்த உணர்ச்சியல்ல வென்பது நோக்கத்தக்கது. அன்பு ஒன்றுக்கே கட்டுப்பட்ட இறைவன் நந்திதேவரை விலக்கி நந்தனருக்குத் தரிசனம் தந்தார். நந்தனர் நேர் நின்று கும்பிட வேண்டினரே தவிர உள்நுழைந்து கும்பிட எண்ணவில்லை. எனவே, இறைவனும் 'உள்நுழை' யென்று கட்டளையிடவில்லை. வேண்டுவார் வேண்டுவதே ஈதல் இறைவன் தொழிலின் முறைமையாதலின்.

இனி, நந்தனரது பேரன்பு முற்றிய வரலாற்றை உன்னுவாம். நாளுக்கு நாள் சிவபக்தி வளர்ந்துவரத் திடீரென்று ஒருநாள் நந்தனருக்குச் சிதம்பர தரிசனம் செய்யவேண்டு மென்ற பெருங்காதல் உதித்தது. இதன் காரணமும் அன்பின் முதிர்ச்சியே யொழிய உரிமையுணர்ச்சியல்ல. இக்காதல் வழி மனம் செல்ல, "உறுகுலத்தோடிசைவில்லை என்றிதுவும் எம்பெருமான் ஏவல்" என்று தமது மனதைச் சமாதானம் செய்துகொண்டு 'நாளைப் போவேன் நாளைப் போவேன்' என்று கூறி நந்தனர் 'நாளைப் போவார்' ஆயினர். தமது குலத்தவர்கட்குக் கோயில் நுழைவில்லையென்ற திட்டத்தை "இதுவும் எம்பெருமான் ஏவல்" என்றே நினைந்து, நந்தனர் தமது மனதைச் சாந்தம் செய்து கொண்டதும் கிளர்ச்சிக்காரர்கட்கொரு பாடமாகும்.

அன்பிற்கு முண்டோ அடைக்கும் தாழ்? இல்லையாகலின், நந்தனரது கரை கடந்த பேரன்பு அவரைத் தில்லையெல்லைக்குச் செலுத்திற்று. அதை வலம் வந்து வேள்விப் புகைகண்டு மறையோசை கேட்டுத் தமது குலம் நினைந்து உட்செல்ல அஞ்சினர். பிறகு தில்லை மன்றின் பெருமையினை நினைக்கும் நினைப்பு மீதூர, துணிந்து மதில் திருவாயிலின் உள்ளே புகுந்தார். ஆங்குள்ள வேதிகைகளைக்கண்டு தம் பிறவி நினைந்து மீண்டும் வெளியே சென்றார். தாம் உள்ளே நுழையக் கூடவில்லையே என்ற உணர்ச்சியினால் அவரது பக்தியும் மெய்யன்பும் எள்ளளவும் குறையவில்லையென்பது பெரிதும் நோக்கத்தக்கது. தாங்கள் நினைத்த காரியங்கட்காகக் கோயில் சென்று பிறகு காரியம் கைகூடாவிடில் 'இந்த சுவாமிக்குக் கண்ணில்லையா, இந்தப் பாழுங் கோயிலில் இடிவிழாதா' என்றெல்லாம் தங்கள் வயிற்றெரிச்சலைக் கொட்டியளக்கும் 'உயர்குலத்து மெய்யடியார்கள்' எத்தனை பேரை நாம் காண்கிறோம். இவர்களோடு நந்தனரை ஒப்பிடுக. நந்தனர் தமக்கென ஒன்றும் வேண்டவில்லை. இறைவனைத் தரிசிக்கும் ஆசையைத் தவிர வேறெவ்வித ஆசையும் அவருக்கில்லை. தமது

குலத்தினுல் உண்டான தடையினல் அவரது மெய்யன்பு ஒரு சிறிதும் குன்றவே யில்லை ; நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே போயிற்று.

“ ஆராத பெருங்காதல்
ஒப்பரிதாய் வளர்ந்தோங்க உள்ளுருகிக் கைதொழுதே
செப்பரிய திருவெல்லை வலங்கொண்டு செல்கின்றார் ”

என்பது சேக்கிழார் மணிவாக்கு. இதில் ஒவ்வொரு சொல்லையும் பன்முறை நோக்குக. இறைவன் சந்நிதியில் போக முடியவில்லையே என்ற வருத்தம் ஒருபால் உறுத்துங்காலும், எல்லையை மட்டும் வலஞ்செய்யுங் காலத்திலும் நந்தனர் ‘ஆராத பெருங் காதல் ஒப்பரிதாய் வளர்ந்தோங்க உள்ளுருகிக் கை தொழுதார்’. இறைவன் திருமுன்பு நின்று விபூதி உருத்திராக்கமணிந்து தேவார திருவாசகங்களை உரத்த குரலிற் பாடும் உயர்குலத்துப் புல்லுருவங்களுக்கு ஆராத பெருங்காதலில்லை; அது ஒப்பரிதாய் வளர்ந்தோங்குவதில்லை ; உள்ளுருகக் கைதொழும் செயலுமில்லை என்பது மிகையாகாது.

இவ்வாறு எல்லை வலஞ்செய்வதில் சிலநாட்கள் கழிந்தன. நந்தனரது ஆராத பெருங்காதல் மீண்டும் பெரு வெள்ளம்போற் பெருகிற்று. திருவாயிற் புறம், திருவாயில் நேர், தில்லையெல்லை என்ற மூன்று படிகளையும் கடந்து அவ்வன்புவெள்ளம் தில்லைத்திரு மன்றில் நுழைந்தது. பிறவியினல் உண்டாம் தடையை வெல்லும் ஆற்றல் நந்தனரது பேரன்பின் பெருக்குக்கு வந்துளது என்ற பக்குவத்தை நன்கறிந்த இறைவன், கனவில் நந்தனருக்குத் தீக்குளித்து உட்புகுமாறும் தில்லை வாழந்தணர்க்கு நந்தனரை ஏற்குமாறும் கட்டளையிட்டார்.

இங்கே ஒரு நவீன ஆராய்ச்சி உண்டு. “இப்பிறவி போய் நீங்க எரியினிடை நீ மூழ்கி.......மேவினர்” என்று இறைவன் கூறியதாகச் சேக்கிழார் சொல்வது சேக்கிழார் வாக்கல்ல, பிற்காலத்து இடைச் செருகல் என்றும், பாட்டின் போக்கும் பிறவும் இதை வலியுறுத்தும் என்றும் சில பேரறிஞர்கள் கூறுவதை நான் கேட்டிருக்கிறேன். இறைவனுக்குச் சாதி வேற்றுமை, தீண்டாமை முதலிய கொள்கைகள் உண்டென்று ஏற்பட்டு விடுமாம். அதற்காக இப்பாட்டில் இறைவன் வாக்காகச் சேக்கிழார் கூறுவது தவறென்றெண்ணி, சேக்கிழார் வாக்கேயல்லவென்பது பொருத்தமாம். இவ்வாறு பொருள் கூறுவதைவிட வேறொரு வழியில் பொருள் கொண்டு இறைவன் திருவாக்கின் மேன்மையையும் சேக்கிழார் வாக்கே யென்பதையும் வலியுறுத்துவதே விசேஷமென அப்பேரறிஞர்கட்கு விண்ணப்பித்துக் கொள்கிறேன். அஃது பின் வருமாறு:—

“ஏ! தில்லை வாழந்தணர்களே! நீங்கள் நாடோறும் என்னைத் தொழுகின்றீர்கள். என் உருவமாகிய தீயை வளர்க்கின்றீர்கள். என்றாலும் இப்புறப்பூசைகளினல் உங்கள் அன்பு இன்னம் முதிர்ச்சி யடையவில்லை. இப்பூசை வசதிகளெல்லாம் இல்லாத இழிகுலத்தான் ஒருவன் எல்லைப்புறத்தில் உள்ளான். என்னைக்கண்டு தொழும் வசதியை நீங்கள் அவனுக்குத் தா

வில்லை யாயினும் உங்களைவிட அவனே என்மீதுள்ள அன்பிற் சிறந்தவன். அவனது பக்திக்கு ஓரளவும் எல்லையுமில்லை. அவன் பூசுநீறுபோல் உள்ளும் புனிதன். பூதமைந்து நிலையிற் கலங்கினும் என்னை மறவான். ஓதுகாத வுரைப்பின் நெறிநின்றான். கூடும் அன்பினிற் கும்பிடலேயன்றி வீடும் வேண்டா விறலின் விளங்குகின்றான். ஈரன்பினன், யாதுங் குறைவிலா வீரன். அவனது பெருமையை உங்களுக்குக் கண்கூடாகக் காட்ட விரும்புகிறேன். நீங்கள் சுடுமென்று அஞ்சுகிற என் உருவமாகிய தீயை எழுப்புங்கள். அவன் அதனுட் புகுந்து 'புண்ணியமா முனிவடிவாய், மெய்திகழும் வெண்ணூல் விளங்க வேணி முடிகொண் டெழுவான்' ; என்மீது யார் உண்மையான அன்பு செலுத்துகிறார்களோ அவர்களுக்குள்ள இடையூறுகளை விலக்கி அவர்களை என் திருவடிபால் அணைவிப்பதே எனதுதொழில் என்பதைப் பிரத்தியக்ஷமாக அறியுங்கள்" என்று தில்லைவா ழந்தணராகிய தலைக்குலத்தவர்க்கும் ஏனைய உயர்குலத்தவர்க்கும் அறிவுறுத்தவே ஒரு கடைஞனுக்கு அருள்புரிந்தார் அருட்பெருஞ் சோதியார் எனக்கொள்வதே சிறப்பு.

கனவில் நந்தனுருக்கும் தில்லைவா ழந்தணர்க்கும் திருக்கூத்தன் அருள் செய்தார். தில்லைவாழந்தணர் நல்லொழுக்கமும் நற்சார்பும் உடையராய் நந்தனார்காலத் திருந்தமையால் இறைவன் திருவுளக் குறிப்பை நன்றாய் அறிந்து கொண்டனர். உடனே நந்தனரிடம் சென்றார்கள். இத் "தவ மறையோரெல்லாரும்" ஆங்கு அவரிடம் கூறும் வாக்கின் நுட்பம் நோக்கத்தக்கது. "அடே, நந்தன் பயலே! உன்னைத் தீயிலிட்டுப் பொசுக்கி மந்திர ஸம்ஸ்காரஞ்செய்து உள்ளே சேர்த்துக் கொள்கிறோம்" என்று அவர்கள் சொல்லவேயில்லை. ஆனால்,

"ஐயரே அம்பலவர் அருளால்இப் பொழுதணைந்தோம்
வெய்யஅழ லமைத்துமக்குத் தரவேண்டி"

என்றார்கள். கல்நாருரித்தன்ன ஈரமிலா நெஞ்சுடைய தில்லைவாழ் ஐயர்கள், ஆராத காதல் ஒப்பரிதாய் வளர்ந்தோங்க உள்ளுருகும் நந்தனுரைத் தங்களுக்கு அன்புப் பாடம் கற்பிக்கும் ஐயரே என்றழைத்ததை நோக்குக. தங்கள் குலச்செருக்காலும் புறப்பூசைச் செருக்காலும் உண்மை யன்பின் உறைவிடத்தை யறியாத அந்தணர்கள் கண்ணுதல் அருளால் காட்டக் கண்டாராதலின் "அம்பலவர் அருளால் இப்பொழுது அணைந்தோம்" என்றார்கள். அன்பிற்கு முன் மந்திர ஸம்ஸ்காரங்கள் நில்லாவென்பதை நன்குணர்ந்த அந்தணர் "அழல் அமைத்து உமக்குத் தர வேண்டி" என்று தாங்கள் சொல்லியபடி செய்யும் ஏவலாளர்களென்பதையும் விளக்கினர்கள்.

தீ வளர்க்கப்பட்டது. நந்தனர் இறைவனை நினைந்து தீயை வலம் வந்தார். "கைதொழுது நடமாடுங் கழலுன்னி அழல் புக்கார்" புண்ணியமா முனி வடிவாய் நூல் விளங்க எழுந்தார். நந்தனுருக்கு நாக்கை மூக்கைமட்டும் சுடும் ஸமஸ்காரம் நிகழவில்லை. உடல் முழுமையும் தீக்குளிக்கும் அரிய ஸமஸ்காரம் நிகழ்ந்தது. ஓரந்தணன் மற்றொரு சிறுவனுக்கு நூலணிவிக்கும் உபநயனம் நடைபெறவில்லை. இறைவனே தீயில் உருமாற்றி நூலணிவித்தான்.

தில்லை வாழந்தணர்க்கும் ஏனைய குலங்கட்கும் முதலென்று புராணாதிகள் விதந்தோதும் பிரமன்போல் நந்த மகாமுனிவர் விளங்கினார்.

“ செந்தீமேல் எழும்போது செம்மலர்மேல் வந்தெழுந்த
அந்தணன்போல் தோன்றினார் ”

என்பது சேக்கிழார் பெருமான் திருவாக்கு. எனவே கடைஞனொருவன் இறைவன் திருவடியன்பினால் குலங்களைத் தோற்றுவித்த பிரம வடிவம் திகழ விளங்கினமை பெற்றும். இந்நிகழ்ச்சியைக் கண்ணுற்ற அமரர் பூமாரி பொழிந்தனர். தேவதுந்துபி முழங்கியது. “ திருவுடைய தில்லை வாழந்தணர்கள் கைதொழுதார்.”

இனி நந்தனார் அம்பலக்கூத்தனை யணுகி அடிப்பேறெய்தியதை ஆராய்வோம். திருநாளைப் போவாராம் “மறைமுனிவர்” “தில்லை வாழந்தணரும் உடன் செல்லச் சென்றெய்தி உள் புகுந்தார்.” ஈண்டு உம்மை இழிவு சிறப்பின்கண் வந்ததை நோக்குக. (திருத்தொண்டத் தொகையில் முதலில் வைத்து ஓதப்படும் தில்லைவாழந்தணரை வேண்டுமென்றே குறை கூறுவதாக ஒருவரும் எண்ணுதல் கூடாது.) “உள் புகுந்தார் உலகுய்ய நடமாடும், எல்லையினைத் தலைப்பட்டார் யாவர்களும் கண்டிலரால்”. இவ்வாறு அனைவரும் கண்கொட்டாது விழிப்ப, அவரெதிர் மறைதல் நந்தனாரும் மாணிக்கவாசகரும் செய்த அருந்தொழிலே. ஐந்து பூதங்களாலாகிய பருவுடலை இறைவன் திருவருள் அவ்வப் பூதங்களோடு இமைப்பொழுதில் சேர்ப்பித்தது ; ஆன்மா திருவடியில் நின்றது. இதுவே மிகச் சிறந்த விதேக முத்தியாகும்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த விவரங்களடங்கிய வரலாற்றினைச் சேக்கிழார் பெருமான் பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடியருளினர். அவர் பாடிய பாடல்கள் முப்பத்தேழனுள் ஓரெழுத்தையேனும் இடைச் செருகலென்றுவது நல்ல கொள்கைகட்கு மாறுபட்டதென்றுவது கொள்ள வேண்டிய அவசியமே யில்லை. மேற்கூறியவைகளிலிருந்து சிவபெருமானாவது சேக்கிழார் பெருமானாவது சாதிவேற்றுமை உயர்வு தாழ்வுகள் நமது நாட்டில் வேண்டுமென்று எண்ணுவதாகக் கொள்வதற்கிடமில்லை. சாதி மெய்யன்பின் முன் நில்லாதென்பதையே இச்சரிதை வலியுறுத்தும். இவ்வொரு உண்மையை வலியுறுத்தவே இக்கட்டுரை எழுந்தது. இதை விட்டு விட்டு நந்தனார் கோயிலுக்குள்ளே செல்லும் உரிமை பாராட்டாததினால் இப்போதைய ஆதிதிராவிடர்களும் அவ்வாறு செய்தல் கூடாது, நந்தனார் தீப்புகுந்த பிறகே உட்சென்றதினால் அவர்களும் அவ்வாறே செய்யவேண்டும், கடவுளே தீக்குளி என்று கட்டளையிட்டதால் சைவ சமயத்துக்கு சாதி இன்றியமையாத அடிப்படை என்பன போன்ற பலவகையான விபரீதப் பொருள்கள் காண்பதற்கு இக்கட்டுரையில் இடமில்லையென்பதையும், இவ்வரலாற்றைக் கிழித்துச் சின்னாபின்னமாக்கி மனம் போனவாறெல்லாம் குறைகூறுதல் தவறென்பதையும் போலி ஆராய்ச்சிப் புலிகளின் கூரிய நகங்கட்குத் தெரிவிக்கின்றும்.

“ செம்மையே திருநாளைப் போவார்க்கும் அடியேன் ”

# ஒளி

[P. பொன்னரங்க முதலியார், B. A.]

'செந்தமிழ்ச் செல்வி' யென்னும் அழகிய பத்திரிகையின் சமீபத்திய மாத இதழ் ஒன்றில் "முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள்" என்னும் தொடக்கத்துப் பாட்டுக்கு அரிய உரை எழுதியவர், அந்த வாகீசப் பெருந்தகையின் இன்னொரு பாட்டாகிய "வெள்ளத்தைச் சடையில் வைத்த........உள்ளத்துளோளியுமாகும் ஒற்றியூருடைய கோவே" என்னும் பாட்டை மேற்கோளாகக் காட்டி ஒளி என்பதற்குப் புகழ், அறிவு,தெளிவு என்று பொருள் கொடுத்திருப்பதை நேயர்கள் அறிவார்கள். அப்படி பொருள் கொள்வது சரியா என்பதை நாம் இங்கு ஆராய்வாம்.

'ஒளி வளர் தில்லை' என்று "தெளிவளர்வான் சிலை........என்ற தொடக்கத்துத் திருக்கோவையார் பாவில் வரும் சொற்றொடருக்குப் பேராசிரியர் 'ஒளி வளரா நின்ற தில்லை' என்றே பொருள் கூறிவிட்டு விட்டனர். பின்னர் "ஈசர்க்கு யான் வைத்த அன்பு" என்னும் தொடக்கத்துப்பாட்டில் வரும் 'தில்லையின் ஒளி போன்றும்' என்பதற்கும் 'தில்லையின் ஒளியை ஒத்து' என்றே கூறியிருக்கிறார். தில்லையென்பது அண்டத்துக்கு இதயம் என்பதை, "திருவளர் ஆரூர் மூலம்........மன்று இதயம்" என்ற திருவிளையாடற் புராணச் செய்யுளால் அறிகிறோம். அதுபோலவே முருகன் ஆறுபடை வீடுகளில் ஒன்றான சுவாமிமலையை "அநாகத க்ஷேத்திரம்" அதாவது இதயம் குறிக்கும் தலமாக எடுக்கிறார்கள். அப்பதியைப்பற்றி அருணகிரியார் 'ஒளிவளர் திருவேரகமே' என்று 'தெருவினில் நடவா மடவார்' என்னும் திருப்புகழில் குறிக்கிறார். ஆகவே ஒளி யென்பதற்கு சோதி யென்று பொருள் கொள்வது ஏற்புடைத்து என்று தோன்றுகிறது. 'அருள் ஒளி' என்றும், 'அருள் சோதி' என்றும் இராமலிங்க சுவாமிகள் அடிக்கடி சொல்லுகிறார். திருமந்திரத்தில் 'அருள் ஒளி' என்றே ஒன்பது செய்யுள்கள் அடங்கிய அத்தியாயம் இருக்கிறது. மாணிக்கவாசகரும் "ஜோதியாய்த் தோன்றும் உருவமே" என்று கூறியிருப்பது கவனிக்கத் தக்கது. "உய்ய என்னுள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற மெய்ய" என்று அவரே, அருளிச்செய்திருப்பது அந்த சோதி ஓங்கார ரூபமாய் நம் உள்ளத்தில் திகழ்கிறது என்பதைக் காட்டுகிறது. "ஆங்காரமு மடங்கார்" என்னும் தொடக்கத்துக் கந்தரலங்காரப் பாட்டில் "ஓங்காரத் துள்ளொளிக்குள்ளே முருகன் உருவங்கண்டு" என்று சொல்லியிருப்பது இந்தப் பொருட்கு அரண் செய்கிறது. திருப்புகழிலும் "வாதினையடர்ந்த" என்னும் பாட்டில் "சோதி யுணர்கின்ற வாழ்வு சிவம்" என்று கூறியிருப்பது சிவோகம் பாவனையில் சோதியையுணர்வதே நமது வாழ்வின் நோக்கம் என்பதைக் காட்டுகிறது. அப்படி சோதியுணரும்போது ஆனந்தம் தோன்றுகிற

தென்பதை "ஆனந்தமாக்குமென் சோதி" என்று "பார்பதம்" என்னும் தொடக்கத்துந் திருவாசகப் பாவினில் கூறியிருப்பதால் அறியலாம். 'புளிக் கண்டார்" என்று ஆரம்பிக்கும் திருமந்திரத்திலும் "ஒளிக்குள் ஆனந்தத் தமுதூறும் உள்ளத்தே" என்று கூறப்பட்டிருக்கிறது. மேலும், ஞானக் கோவையில் ஒரு பாகமாகிய நெஞ்சறி விளக்கத்தில், "வெளியில் ஒளியைப் பார் நெஞ்சே" என்று சொல்லியிருப்பதும், இன்னொரு சித்தர் (சிவவாக்கியர்)"ஒளியதான காசிமீதுவந்து தங்குவோர்க்கெல்லாம்,வெளியதான சோதி மேனி விசுவநாதன் ஆனவன்" என்று உரைத்திருப்பதும் ஈண்டு குறிக்கத் தக்கது. பிறகு திருவாசகத்திலும் "புன்புலால் யாக்கை" என்ற தொடக்கத்துச் செய்யுளில் "துன்பமே பிறப்பே யிறப்பொடு மயக்காந் தொடக்கெலா மறுத்த நற்சோதி" என்று அதை நன்மை பயக்கும் சோதி என்று காட்டி யிருப்பது கவனிக்கற்பாலது. இந்த சோதி தரிசனம்தான் பரை தரிசனம் என்றும், அதைப் பாராது பார்த்துப் பழகியவர்கள்தான் சிவமாகிய இன்ப நிலையை அடையக் கூடியவர்கள் என்றும், இந்த சோதிதான் விருந்து என்றும், அதன் பிறகு ஏற்படும் சிலம்பொலி (அல்லது நாதம்) சிவம் என்றும் யோக நூல்கள் அடிக்கடி முழங்குகின்றன. வள்ளலார் "யோகத்தி னுள்ளொளி யாயே நின்றான்" என்றும், மணிவாசகர் "இன்னருளால் ஒளிவந் தென்னுள்ளத்தி னுள்ளே ஒளிதிகழ, கிளிவந்த மென்மொழியாள்" என்றும் அருளியிருப்பதைக் காண்க. அதே மாதிரி பாம்பன் சுவாமிகளும் பரிபூரணானந்த போதத்தில் (110-ம் பக்கம்) "திரோதான சத்தி(ஆதி சத்தி)யானது அருளை நாடார்க்கு இருளாகவும், அருளைப் பெற்றவர்க்கு ஒளியாகவும் நிற்கும்" என்று காட்டுகிறார். "வாழ்த்த வல்லார்மனத் துள்ளூறு சோதி" என்று திருமந்திரத்தில் கூறியிருப்பதும், "ஏத்தாதார் அகத்திருளா னானை" என்ற அப்பர் சுவாமிகள் திருவாக்கும் மேலே சொல்லி யிருப்பதை வற்புறுத்தும்.

ஆகவே பெரியார் கருத்துக்களை அறிய முயல்பவர்கள், அவருடைய வாக்குகளினின்றும், அவர்போன்ற பெரியோர் *வாக்குகளினின்றும் உண்மையை ஆராய்ந்து கடைப்பிடித் துய்வார்களாக.

---

* An extract from "Browning Studies" by Edward Berdoe is herewith appended for the benefit of those who may take delight in comparing Western ideas with our own.

**Paracelsus**

"Truth is within ourselves.........A baffling and perverting carnel mesh blinds it and makes all error, and *to know* rather consists in opening out a way whence the *imprisoned splendour* (உள்ளொளி) may escape than in effecting entry for a light supposed to be without."

Compare also Wordsworth's Ode on the Intimations of Immortality.

"Trailing clouds of glory (உள்ளொளி) do we come from God who is our home"

# சமாதான உரை

[மா. வே. நெல்லையப்ப பிள்ளை, B. A.]

திருவாளர் பி. பொன்னசந்த முதலியார் அவர்கள், B. A. ஒளி என்ற தலைப்பின்கீழ், நான் செந்தமிழ்ச்செல்வி சிலம்பு ௧0, பரல் ௫-ல் 'முன்ன மவனுடைய நாமம்' என்ற முதற் குறிப்புடைய தேவாரப்பாட்டுக்கு எழுதிய உரையில் ஒரு பகுதிக்கு மறுப்புரையாக எழுதிய கட்டுரையில் நான் 'ஒளி' என்ற சொல்லுக்குச் 'சோதி' என்று பொருள் கொள்ளவில்லை என்று கூறுகிறார்கள். நான் அவ்வாறு கூறவில்லை. ஒளி, தமிழ்ச்சொல் ; சோதி வடமொழிச் சொல். இரண்டு சொற்களும் ஒரு பொருளன. அவர்கள், அக்கட்டுரையில் இரண்டாவது பாதியில் 'ஒளிவளர் திலலை' என்ற சொற்றொடர் முதல் இறுதியில் "வற்புறுத்தும்" என்ற சொல்வரை பெரியோர்கள் கூற்றுக்களாக அவர்கள் கூறும் மேற்கோள்களின் கருத்துக்கள் எனக்கும் உடன்பாடுதான். அக்கருத்துக்களுக்கு நான் உரையிற் கூறியவை சிறிதும் முரணுடையவையல்ல.

2. அவர்கள் முதலாவது பந்தியில் நான் 'ஒளி' என்ற சொல்லுக்கு, புகழ், அறிவு, தெளிவு என்று பொருள் கொள்ளுதற்கு "வெள்ளத்தை - உள்ளத்து ளொளியுமாகும்" என்ற திருநாவுக்கரசர் தேவாரப் பாட்டை - மேற்கோளாகக் கூறினதாகக் கூறுகின்றார்கள். 'ஒளி' என்ற சொல்லுக்குப் புகழ் என்று பொருள் கொள்ளுதற்கு அப்பாட்டு பொருத்தமுடையதன்று. நான் அதனை மேற்கோளாகக் கூறவுமில்லை. ஒருவர்தம் உள்ளத்தில் தெளிவு அறிவை உண்டாக்கும் (அருள்) ஒளியைக் காணுதலுக்கு மேற்கோளாகக் "கள்ளத்தைக் கழிய மன மொன்றிநின் - றுள்ளத்தி லொளியைக் கண்டதென் னுள்ளமே" என்ற தேவாரப்பாட்டைக் கூறினேன். ஒளிக்குப் புகழ் என்ற பொருளும் உண்டு என்றுகூறி அதற்கு மேற்கோளாக 870-வது திருக்குறட் பாட்டில் ஒளி என்பதற்குப் பரிமேலழகர் புகழ் என்று உரை கூறியிருத்தலைக் காட்டினேன்.

3. பரிமேலழகர் திருக்குறள் 970-556 பாட்டுக்களிலுள்ள ஒளி என்ற சொல்லுக்கும் 'புகழ்' என்றே உரை கூறி யிருக்கின்றனர். இன்னும் சீவக சிந்தாமணி-நாமகளிலம்பகம், 248-வதுபாட்டில் வருகின்ற "மன்னன் ஒளி" என்பதற்கு மன்னனுடைய புகழ் என்று பொருள் கொள்ளப்படுகின்றது. விரிப்பின் உரை பெருகும்.

4. "முன்னமவனுடைய" என்ற தேவாரப் பாட்டுக்கு அறநெறிக்குட்பட்ட சிற்றின்ப நிலையிலும் அறமும் மறமுங் கடந்த பேரின்ப நிலையிலும் வைத்து நான் உரை கூறவேண்டியவன் ஆதலின் ஒளி என்ற சொல்லுக்குப் பேரின்ப நிலையில் இன்ன பொருள், சிற்றின்ப நிலையில் இன்ன பொருள் என விதந்துகூறக்கடமைப்பட்டுள்ளேன். இறைவனினின்றும் வேறாகாத அருட் சத்தி ஒன்றுதானே ஆன்மாக்கள் பக்குவமடைதற் பொருட்டு அவைகள் உலக போகங்களைத் தேடவும் நுகரவும் செய்ய மலத்தோடு கூடிய திரோதான சத்தியாகவும் பக்குவமடைந்த ஆன்மாக்களுக்கு மலத்தோடு கூடாத

பொருளாகவும் விளங்குகின்றது. முன்னையது சிற்றின்பத்துக்குரிய உலக வாழ்வு நிலை; பின்னையது பேரின்பத்துக்குரிய வீட்டின்ப வாழ்வு நிலை. ஆகவே அருட்சத்தியினது பேரொளி கோடி ஞாயிற்றெளி ஒன்று கூடினும் சிறிதும் ஈடாகாத ஓரே நிலையினதாயினும் ஆன்மாக்களுடைய பக்குவம் நோக்கி அவ்வொளி அவைகளுக்கு வேறுபடுகின்றது. சிற்றின்பத்துக்குரிய மக்களது உலக வாழ்வு நிலையில் மக்களுக்கு அவர்களுடைய தத்துவக் கருவி வழியாய் அவ்வருளொளி ஏகதேசப்பட்டு விளங்கி உலக அறிவைக் கொடுக்கின்றது. உலக அறிவு நன்மை தீமைகளைப் பகுத்தறியும் அறிவு. இந்த உலக அறிவும் அதனை உடைய மக்களது பக்குவத்துக்குத் தகுந்தவாறு பலவகைப் பட்டிருத்தலை நாம் உலக அநுபவத்திற் காணலாம். பகுத்தறிவில் மயங்காது உறுதிப்பட்டுத் தீமையை விலக்கி நன்மையை உணரும் அறிவுடை மக்கள் உலக நலத்துக்கு இணங்கிய ஒப்புரவுச் செயல்களைச் செய்கிறார்கள். அச்செயல்களினது பயனை அறியும் மக்கள் அச்செயல்களைச் செய்தவர்களை நன்கு மதித்துப் பேசுகிறார்கள்! இந்த நன்மதிப்புப் பேச்சுக்களே புகழ் எனக் கூறப்படுவது. இப்புகழானது இல்வாழ்வார்களால் இம்மையில் அடையும் நற்பயன் ஆகும். இதனையே பண்டைத் தமிழ்ப்புலவர்கள் ‘இவ்வுலகில் பூத உடம்பு போலப் பொன்றாது நிற்கும் புகழுடம்பு’ எனக் கூறினர். ஆகவே புகழுக்குக் காரணம் நற்செயல்களும் அந்நற் செயல்களுக்குக் காரணம் அவைகளைச் செய்கிற மக்களிடத்தில் விளங்குகிற ஏக தேசப்பட்ட அருளொளி விளக்கமும் ஆதலின் திருவள்ளுவர் முதலிய பண்டைத்தமிழ்ப் புலவர்கள் இறைவனது அருளைக் குறிக்கும் ஒளி என்ற சொல்லைப் புகழ் என்ற பொருளிலும் வழங்கி வந்தார்கள்.

5. உயிர் அறிவுடன் இறைவனது அருள் ஒளி மேலே கூறியபடி சிறுக வாயினும் பெருக ஆயினும் கலந்தால் அல்லாமல் உயிர்களுக்கு அறிவு விளங்காது. ஆதலின் ஒளி என்பது சிற்றறிவுக்கும் தெளிவுஅறிவுக்கும் மேலான நிட்டை அறிவுக்கும் பெயர்களாக வழங்கப்பட்டு வந்தது. அதுவன்றி அவ்வொளிக்கு முதலாயுள்ள இறைவனையும் குறிக்க அது வழங்கப்பட்டு வந்தது.

6. (ஜ்யோதி) சோதி என்ற வடமொழிச் சொல்லும் பேரொளிக்கு (Light) மாத்திர மன்றி முழுமுதற் கடவுளுக்கும் பிரமவிட்டுணுக்களுக்கும் ஞாயிறு திங்கள் விண்மீன் முதலிய ஒளிப் பொருள்களுக்கும் அறிவுக்கும் பெயர்களாய் வழங்கப்படுகின்றன. (See Apte’s Sanskrit English Dictionary.)

7. ஒளி என்ற சொல் பேரின்ப நிலையில் அருட் பேரொளியைக் குறிக்கிறது. அதனைப்பற்றித் திருவாளர் பி. பொன்னரங்க முதலியார் அவர்களுக்குச் சங்கையில்லை ஆதலின் நான் அதனைப்பற்றி எழுத அவசியம் இல்லை.



# திருவாசகத்தில் ஒரு மணிவாசகம்

[அ. வரதநஞ்சையபிள்ளை]

*வேண்டத்தக்க தறிவோய்நீ வேண்டமுழுதுந் தருவோய்நீ*
*வேண்டும் அயன்மாற் கரியோய்நீ வேண்டிஎன்னைப் பணிகொண்டாய்*
*வேண்டிநீயா தருள்செய்தாய் யானும்அதுவே வேண்டின்அல்லால்*
*வேண்டும்பரி சொன்றுண்டென்னில் அதுவும் உன்தன் விருப்பன்றே.*

—குழைந்தபத்து ௬.

இதன் பொழிப்பு:—இறைவனே! நீர் முற்றறிவுடையீர். ஆகலின் என்னினைய உயிர்க்கொருநிகட்கு இன்னின்ன காலங்களில் வேண்டத் தக்கவை இவையிவையென நன்கறிபவராகின்றீர். அங்ஙனம் அறிந்து அவற்றை முன்னதாகவே அமைத்துவைத்துக் காத்திருந்து, அவ்வக்காலத்து ஆன்மாக்கள் அவைகளை வேண்டுந் தருவாயில் பொருளுடைய பெருமானீராதலின் மாறாது வழங்கியருள்கின்றீர். ஆயினும், தற்போத முனைப்புடன் உம்மை அடைய விரும்பி முயன்ற பிரமவிட்டுணுக்களுக்குக் காண்டற்கும் அரியராயினீர். இத்தகைய ஒப்புயர்வில்லாத நீரே, கல்லாத நெஞ்சிற் கடைப்பட்ட நாயேனையும், (யான் நும்மை யாதும் வேண்டிக் கனிந்த அன்புடன் இராவாமலிருப்பவும்) வலிந்து அறை கூவியழைத்து ஆட்கொண்டு நும் திருவடித்தொண்டு புரிந்து பேரின்பப் பெருவாழ்வினை யடைந்துய்யும் பெறலரும் பேற்றை வழங்குவீரு மாயினீர்! (தாம் வளர்த்ததோர் நச்சுமரமாயினும் வைத்து வளர்த்த அருமை கருதி அதனைத் தடியாது போற்றுவார்போல் ஏழையேனையும் பேணும் பொறுப்பு நும்பாலுள்ளதெனத் தெள்ளத்தெளிய அறிகின்றேன் ஆகலின்) நீர் எனக்கு யாதொன்று வேண்டுமென்பதனை அறிந்து வழங்க அருள் கூர்வீரோ அஃதெதுவாயினும் மகிழ்ச்சியுடன் இருகையாலும் ஏற்றுப் பெற்றுக் கொள்ளக் கழிபேரவாவுடையேனாகின்றேன். அதுவேயுமன்றி, என் உள்ளத்தே யாதொரு பொருள் வேண்டுமென்னும் அவா உதிக்குமேல் அஃது, நின் சேவடிக்கண் மேன் மேலும் அன்பு பெருக வேண்டுமென்பதாக இருக்குமல்லது பிறிதாயிராது என்பதாம்.

'வேண்டும் பரிசு....விருப்பன்றே' என்பதற்கு (யான் விரும்பும் விருப்பமும் நுமது திருவுள்ளத்தில் முன்னர்த் தோன்றி என் மனத்திற்கு நும்மால் உந்தப்பட்டதாகவே யிருக்கும்) எனக் கூறுவாருமுளர்.

விளக்கக் குறிப்பு:—உயிர்கள் இருண் மலத்தான் முற்றுங் கவரப்பட்டு அறிவற்ற குருட்டு மகவுகள் போன்றிருந்த கேவலாவத்தையில், அவை, தம்மை ஒருவாற்றானுணர்ந்து பையப் பையப் படியேறி உய்யும் நெறி கூடுமாறு, இறைவன், தனது பரிக்கிரக சத்தியாகிய மாயையால் தநுகரணபுவன போகங்களை அவற்றிற்குத் தந்து கூட்டலானும், அங்ஙனம் உடம்பெய்தி வினைக்கீடாய் போகங்களை நுகர்ந்து வரும் சகலாவத்தையில், மனைவி, பொருள், மக்கள் முதலிய பற்றுக்களில் அழுந்திப் பெருகிய துன்பங்கட்

